உ
சிவமயம்




# கோவிலூர் கொற்றவாளீசர் திருக்கோயில்

## கோவிலூர் ஆதீனகர்த்தர்கள்

## இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி நிறுவனம்

வெளியீடு

இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி நிறுவனம்
கலாக்ஷேத்ரா பப்ளிகேஷன்ஸ்,
84, கலாக்ஷேத்ரா ரோடு,
திருவான்மியூர் – சென்னை – 41.

உ

ஸ்ரீ குருவே துணை

# கோவிலூர் கொற்றவாளீசர் திருக்கோயில்

சாலிவாடி என்றும் கழனிவாசல் என்றும் பெயருடைய ஊரில் சிவகுப்தன் என்ற தனவணிகள் இருந்தான். அவன் மனைவி சுதன்மை. இவர்கள் இருவரும் அரன்நாமம் ஓதித் திரிபுவனேசுவரரைப் பக்தி செய்து வந்தார்கள். அவர்களுடைய அருமை மகள் அரதனவல்லி. சுதன்மை திரிபுவனேசையிடம் மிகுந்த பக்தியுடையவள்.

அம்பிகையின் திருக்கோவில் அருகில் சிவகுப்தனுடைய வயல் இருந்தது. உயர்ந்த சாலிவாடி நெல் கதிர் முற்றத் தொடங்கியிருந்தது. அரதனவல்லியைக் காவலுக்கு அனுப்பினார்கள். அவள் விளையாட்டுப் பெண். கழனிக்கே போகாமல் மலர்ச்சோலையில் சென்று விளையாடிக் கொண்டிருந்தாள்.

கோவிலில் குடிகொண்டிருந்த தேவி சுதன்மையின்பால் அன்பு கொண்டு தானே அரதனவல்லியாக வடிவமெடுத்து வயலுக்குக் காவலாக நின்றாள்.

நடுப்பகலில் 'குழந்தைக்குப் பசிக்குமே' என்று தயிர் சாதம் பிசைந்து எடுத்துக் கொண்டு பெண்ணைத் தேடிச் சென்றாள் சுதன்மை. பரப்பின்மீது சமர்த்தாக உட்கார்ந்து கொண்டு கொம்பினால் கிளிகளை ஓட்டிக் கொண்டிருந்த மகளைப் பார்த்து மகிழ்ந்தாள். வெய்யிலில் சிரமப்படுகிறாளே என்ற பரிவோடு கையில் தயிர்சாதம் எடுத்துப் போட அரதனவல்லி ருசித்துச் சாப்பிட்டாள். கொஞ்ச நேரம் கழித்து அரதனவல்லி வந்து "அம்மா! பசிக்கிறது" என்றாள். "என்னடி இது!! இப்போது தானே உனக்குச் சாதம் போட்டுவிட்டு வந்தேன். ஆவலாகச் சாப்பிட்டாயே! அதற்குள்ளே பசியா?" என்று திகைத்தாள் சுதன்மை.

அரதனவல்லி தான் வயல் பக்கமே போகவில்லை என்று கூறியதும் சுதன்மை அதிசயத்தில் ஆழ்ந்தாள். தேவியின் கருணையே இது என்று உணர்ந்து கொண்டாள். சிவகுப்தனும் சுதன்மையும் அன்னம் உண்டு அருள்புரிந்த தேவியை மனமுருகிப் போற்றினார்கள்.

நெல்லைக்காத்த அம்பிகைக்குத் திருநெல்லைநாயகி என்றும் சாலிவாடீச்வரி என்றும் பெயர் வந்தது.

சிறுமணி சம்பாவைச் சமைத்துக் கட்டித் தயிர் விட்டுக் கலந்து மணக்க மணக்கத் தாளித்துக் கொட்டி வாழைக் குருத்தில் சாப்பிட்டால் அன்னை ததியோன்னப் பிரியையாக இருப்பதில் அதிசயமென்னவென்று தோன்றும்.

கோவிலூர்ப் புராணத்தில் உள்ள பல கதைகளில் இதுவும் ஒன்று. காரைக்குடிக்குச் சமீபத்திலுள்ளது கோவிலூர். மதுப்ரிய முனிவர் தவம் செய்த தலம். அவருடைய தவச்சிறப்பால் இந்த ஊர்க் குளத்துக்கு மதுபு கரிணி என்றும் அருகில் ஓடும் ஆற்றுக்குத் தேனாறு என்றும் பெயர் விளங்குகிறது.

கோவிலூர் இன்னும் பல காரணங்களால் பெருமை பெற்றிருக்கிறது. கோவிலை வைத்துத் தோன்றிய ஊர் இது. திரிசிரபுரம் மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் தெள்ளு தமிழில் தலபுராணம் பாடிய ஊர். வேதாந்த பிரமாண வடமொழி நூல்களை வடமொழி அறியாதாரும் பயிலத் தமிழாக்கம் செய்து தமிழில் பாடம் சொல்லும் முறையைத் தொடங்கிய ஊர். ஆண்டவர் என்ற மகான் வேதாந்த மடம் நிறுவிய ஊர். ஞான மார்க்கத்தை, ஆதி சங்கர பகவத்பாதருடைய அத்வைத தத்துவத்தை உணர்ந்த ஞானியர் மடத்தலைவர்களாக விளங்கிய ஊர்.

ஞானமார்க்கத்தில் ஈடுபடுவதற்கு மனப்பக்குவமே தகுதி: பிறப்பு ஒரு தடையல்ல என்பதை நிலைநாட்டினார் கோவிலூர் ஆண்டவர். சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு காரைக்குடியில் நகரத்தார் குடியில் தோன்றிய முத்துராமலிங்கம் சிறுவயதில் சிக்கல் க்ஷேத்திரத்தில் பெற்றோருடன் வசித்து வந்தார். அருகில் பொருள்வைத்தசேரி என்ற சிற்றூரில் உகந்தலிங்க சுவாமிகள் என்ற ஞானி இருந்தார். அவர் நெசவுத் தொழில் செய்பவர். சங்கரருடைய வேதாந்த சாரத்தை அறிந்த பெரியார். அவரிடம் முத்துராமலிங்கத்திற்குப் பக்தி உண்டாயிற்று. உகந்தலிங்க சுவாமிகள் அவனுக்கு வேதாந்த நூல்களைப் பாடம் கூறி வந்தார்.

ஒரு சமயம் இளைஞனாக இருந்த முத்துராமலிங்கத்தைப் பார்த்த வடநாட்டு யோகி ஒருவர், "இவன் உலகத்துக்கே உபதேசிக்கப் பிறந்தவன்" என்றாராம். அதுமுதல் அனைவரும் அவரை ஆண்டவர் என்று அழைக்கத் தொடங்கினார்கள்.

வேதாந்த நூல்கள் பல கற்றபின் கடைசியாக ஞான வாசிட்டம் படித்துப் பூர்த்தி செய்வது முறை. வசிஷ்ட முனிவர் ஸ்ரீராமபிரானுக்கு உபதேசித்ததன் சாரம் இந்த நூல். வாசிட்டம் படித்த பின்னர் குருவுக்கு தக்ஷிணை கொடுத்து மரியாதை செய்து அவர் அனுக்ரகம் பெறவேண்டும். ஆண்டவர் தம் தந்தையிடம் குரு தக்ஷிணைக்காகப் பொருள் கேட்டார். தகப்பனார் காதில் விழாத மாதிரி இருந்தார். கோபம் கொண்ட ஆண்டவர், "காது செவிடாகி விட்டதா?" என்று கேட்டார். அந்த விநாடி முதல் தந்தைக்குக் காது கேட்கவில்லை. பிறகு உகந்தலிங்க சுவாமிகள் கூறியபடி ஆண்டவர் திருநீறு கொடுக்கவே மறுபடியும் காது கேட்க ஆரம்பித்தது.

இப்படி இறைவன் அருளைப் பெற்ற ஆண்டவர் காரைக்குடியிலிருந்தபோது கழனிவாசல் தலத்திலுள்ள அருள்மிகு நெல்லையம்மை, கொற்றவாளீசர் இருவரையும் வழிபடுவது வழக்கம். ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்தப் பகுதியில் ஏழகப் பெருந்தெரு என்ற வணிகப் பெருமக்களின் குடியிருப்பும் அவர்களுக்குப் பாதுகாப்பாக ஒரு படையும் இருந்தது. இந்தப் பகுதியில் பல ஆலயங்கள் இருந்தன. அவற்றுள் ஒன்று கொற்றவாளீசர் கோவில். வீரசேகர பாண்டியன் என்ற அரசன் இப்பகுதியில் ஆண்டு வந்தான். வேட்டையாடச் சென்றபோது அவனுடைய வாள் தொலைந்து போய்விட்டது. தேடிப்பார்த்த போது ஒரு சிவலிங்கத்தின் அருகில் அது கிடைத்தது. மனம் மகிழ்ந்த பாண்டியன் ஈசனுக்குக் கோவில் எழுப்பினான். ராஜகட்கபரமேசுவரர் என்றும் கொற்றவாளீசர் என்றும் அவருக்குப் பெயர் உண்டாயிற்று.

இந்தக் கோவில் நாளாவட்டத்தில் சிதில மடைந்து மக்கிய கீத்துக்களால் கூரை வேயப்பட்டிருந்தது. ஒருநாள் ஆண்டவர் அங்கே இருந்தபோது இடிமழையுடன் காற்று வீசவே கூரை விழுந்து விட்டது. அப்போதே அவர் நெல்லையம்மனுக்கும் கொற்றவாளீசர்க்கும் கருங்கல் திருப்பணி செய்யச் சங்கல்பம் செய்து கொண்டிருக்க வேண்டும். இந்த எண்ணத்தை மிக உன்னதமான முறையில் அவர் நிறைவேற்றினார்.

கோவிலருகிலேயே வேதாந்த மடம் நிறுவி சாதுக்கள் எந்தவித விசாரமும் இன்றி வேதாந்த பாடங்கள் கேட்டுப் பயனடையவும், தமிழ் நாடெங்கும் ஆதி சங்கரரின் அத்வைதக் கொள்கை பரவவும் வகை செய்தார்.

ஒருவருக்குப் பின் ஒருவராகக் கோவிலூர் மடத்துப் பீடாதிபதிகளாக விளங்கிய ஐந்து மடாதிபதிகள் காலத்தில் திருப்பணிகள் நடைபெற்று இந்தக் கோவில் மிகவும் அழகாக விளங்குகிறது. திருக்குளம், நீராழி மண்டபம், மாடவீதிகள், பாடசலை, குடியிருப்பு வீடுகள் ஆண்டவர் பின் வந்தவர்களுடைய அதிஷ்டான கோவில்கள் என்று விரிவடைந்து பொலிவு பெற்றது கோவிலூர்.

கோவிலூரில் ஐந்தாவது பட்டத்தில் விளங்கிய திருக்களர் ஆண்டவர் காலத்தைப் பொற்காலமென்று பாராட்டிப் புகழ்கிறார்கள். ஆண்டவர் தொடங்கிய திருப்பணிகளை நிறைவேற்றியது இந்த மகானே என்றும் கூறுகிறார்கள். மலாயா நாட்டில் வாழ்ந்த நகரத்தார் பெருமக்கள் இவருடைய காலத்தில் கோவிலுக்குப் பொருளை வாரி வழங்கினார்கள். நித்திய பூஜைகளும், ஆடிப்பூர உற்சவமும் குறைவின்றி நடைபெறச் செய்ததோடு 1908–ஆம் ஆண்டில் கும்பாபிஷேகமும் செய்து வைத்தார். அப்போது சிருங்கேரி பீடத்தை அலங்கரித்த ஜகத்குரு ஸ்ரீஸச்சிதானந்த சிவ அபிநவ நரசிம்ம பாரதி அவர்கள் தாமே நேரில் வந்திருந்தார்கள்.

கோவிலூரை நெருங்கும் போதே இரு உயரமான ரதம் போன்ற மண்டபங்கள் தெரிகின்றன. அங்கிருந்து பார்த்தாலே தூரத்தில் கோபுர தரிசனமாகிறது. அருகில் செல்லச் செல்ல மற்ற கோபுரங்களும் புலனாகின்றன. கோவிலெதிரே எட்டுப்பட்டை வடிவத்துடன் கூடிய நீராழி மண்டபமும் தெப்பக் குளமும். சில சிறுவர்கள் நீந்தி விளையாடுகிறார்கள். குளத்தின் தெற்கு வீதியில் கோவிலூர் மடம். வடக்கில் வீடுகள். கிழக்கில் தென்னை மரங்கள். அமைதி நிலவுகிறது. ஞானத்தேட்டமுடைய தபோதனர் உறையுமிடம் அல்லவா?

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றிருப்பதால் கோவிலும் குளமும் நீராழி மண்டபமும் புதிய மெருகோடு காட்சியளிக்கின்றன.

சுதன்மையின் மகளாக வந்து தயிர் சாதம் விரும்பி உண்ட பெருமாட்டியான நெல்லையம்மன் சந்நிதியில் நிற்கிறோம். கோவிலூர்ப் புராணம் இந்தத் தேவியை சத்தியஞானானந்த ரூபி என்றும், அத்வைத சொரூபி என்றும் புகழ்கிறது.

பளபளவென்று இழைத்த கருங்கற்களால் கட்டப்பட்ட கருவறைகள். அதைச் சுற்றி நீர் நிரப்புவதற்காக ஓடை. வேனில் காலத்தில் அம்மை அப்பன் இருவருக்கும் குளிர்ச்சியாக இருக்க நீர் நிரப்புவார்களாம். தளத்தில் இத்தாலி தேசத்து மார்பிள் கற்கள் பதிக்கப்பட்டிருக்கின்றன.

ஆடிப்பூர உற்சவத்தின் கடைசி நாள். திருக்கல்யாண மகோத்ஸவம் நடக்கப் போகிறது. தேவிக்கு அலங்காரம் நடைபெறுகிறது. மடத்திலிருந்து மரப்பெட்டியொன்று வருகிறது. திரு. செல்லமணி குருக்கள் அதைத் திறக்கிறார். அம்பாளுடைய கவசம். குமுத மலர்க்கரமும், திருவடிகளும் சாத்தி, கண்டமாலை ஒட்டியாணம் அணிவித்து, புருவத்தில் சந்தனம் இட்டு, மூக்குத்தி புனைந்து, மலர் மாலைகளைச் சூட்டியதும் புதுமணப் பெண்ணாகவே திகழ்கிறாள். குத்து விளக்குச் சுடர்விட அருட்சுடராக அவள் நிற்கும் அழகு இதயத்தை மலரச் செய்கிறது.

உற்சவமூர்த்திகள் மகா மண்டபத்தில் வீற்றிருக்கிறார்கள். முதல் நாள் கைலாஸ வாகனத்தில் தவமிருந்து இறைவன் தரிசனம் பெற்ற ஆடிப்பூர அம்மனுக்கு அலங்காரம் தொடங்குகிறது. நீலப்புடவையும் முழுக்கை ரவிக்கையும் அணிந்து அம்மன் காத்திருக்கிறாள்.

புருவமெழுதி, சிரத்தில் முடியமைத்தாயிற்று. முழங்காலை அணைத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் அம்மன். ஆபரணப் பெட்டி வருகிறது. ஆகா! திவ்ய ஆபரணங்கள் ஜொலிக்கின்றன. மடத்துத் துறவி ஒருவர் ஒவ்வொன்றாக எடுத்துத் தருகிறார். அவற்றை அணிவித்துத் தலை கிரீடம் சூட்டியதும் ஆகா! மணப்பெண் களை வந்துவிட்டது! கடைசியில் பொற்கிளிகளைக் கரத்திலும்

புயத்திலும் அமர்த்துகிறார். அடாடா! இந்தக் கிளிகளின் அழகை விவரிக்கவே முடியாது. அலகிலிருந்து மரகத மணி ஊஞ்சலாடுகிறது.

மணவாளரான ஸோமாஸ்கந்தரைப் பார்ப்போம். பொன் இழையால் கரை போட்ட பட்டு அணிந்து மான் மழுவேந்தி அமர்ந்திருக்கிறார். சிரத்தில் கறுப்புத் துணி சுற்றி, கெம்பினால் இழைத்த திருமுடியைச் சூட்டுகிறார். தேவாதி தேவன் அணியும் மகுடம். என்ன கனம்!

அரிய வேலைப்பாடமைந்த மாங்காய் மாலை. பச்சை மரகதம் ஒளிசிதற பலச்ச வைரமிழைத்த பதக்கம். காசு மாலை. பாகம் பிரியாளான உமையும் காசுமாலை பதக்கங்கள் அணிந்து பொன்னாடை புனைந்தவளாய் ரத்தினத் திருமுடி இலங்க மெல்லிய புன்னகையுடன் அருகே அமர்ந்திருக்கிறாள்.

சீர்வரிசைகள் வந்தாயிற்று. பருப்புத் தேங்காய் வைத்தாயிற்று. வைரத் திருமாங்கல்யத்தைக் காட்டினார்கள். உலகநாயகி அணியும் மங்கல ஆபரணம். இன்று நம் கண்கள் கொடுத்து வைத்திருக்கின்றன!

வேதம் முழங்க, மறையோர் அக்னி வளர்க்க, மணியோசைகள் ஒலிக்க, மேளம் முழுங்க திருமங்கல்ய தாரணம் ஆகிவிட்டது. ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தமே!

சகல கல்யாண குணங்களும் நிரம்பப் பெற்ற மஹாதேவனுக்கும், நித்ய கல்யாணிக்கும் நடைபெறும் திருமணம். சகல ஜீவராசிகளுடைய திருக்கல்யாணமும் இதில் அடங்கும்.

இந்த ஆனந்தத்தில் நாம் திக்குமுக்காடிக் கொண்டிருக்கும் போதே தீபாராதனை தொடங்குகிறது. அலங்கார தீபக்கால்கள் கலையழகுடன் செய்யப்பட்டவை. அடுக்குத் தீபமும், நாக தீபமும், ரிஷப தீபமும், கலச தீபமும் – எந்தக் காலத்திலோ வெள்ளியில் கழங்கு கழங்காகச் செய்யப்பட்டவை ஒவ்வொன்றாக ஏற்றித் தீபாராதனை செய்யும் போது இறைவனும், இறைவியும் நேரில் காட்சி தருவதாகவே பிரமை ஏற்படுகிறது.

கேரளத்தில் ஒரு கோவிலுக்குச் சென்றிருந்த போது அன்பர் ஒருவர் "உங்கள் தமிழ்நாட்டுக் கோவில்கள் எல்லாம் பொருட்காட்சி சாலை மாதிரி இருக்கிறது. கலை அம்சங்களில் கவனம் ஈர்க்கப்படுகிறது. எங்கள் கோவில்கள் எளிமையாக இருக்கின்றன. இங்கே சுவாமிதான் முக்கியம். அமைதி தவழும் சூழ்நிலை தியானம் செய்வதற்கு உதவும்" என்றார்.

தமிழ்நாட்டில் கோவிலை அழகு மயமாகச் செய்வதற்கும், தங்கள் கைவண்ணங்களை ஒவ்வொரு துறையிலும் கலைஞர்கள் காட்டுவதற்கும் ஒரு முக்கியமான காரணம் இருப்பதாகப் படுகிறது. கோடிக்கணக்கான அழகுப்

பொருள்களைப் படைத்த ஈசுவரனுக்கு, நமது முயற்சியில் எது தலைசிறந்ததோ அதை அர்ப்பணிக்க வேண்டும் என்ற ஆவல் எழுவது இயல்பே அல்லவா? இந்த ஆசையே கலைச் சிறப்பு மிக்கக் கோவில்களைக் கட்டவும், திவ்விய ஆபரணங்களைச் செய்து சாத்தவும், இசையை அர்ப்பணிக்கவும்' நிருத்யம் செய்து காட்டவும் உந்தியிருக்க வேண்டும்.

இறைவனுடைய சிருஷ்டியில் உயர்ந்த நீரையும் நெருப்பையும், மலரையும், மணத்தையும் அவனுக்கே அர்ப்பணிப்பது போல மனிதனின் படைப்பில் தலைசிறந்தவற்றையும் கோவில்களில் ஈசுவரார்ப்பணம் செய்வதில் பெருமிதமடைந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் தமிழ் நாடெங்கிலும் காணப்படும் சிற்பக்கலையழகு மிளிரும் கோவில்களைக் கட்டி விழாக்கள் நடத்தும் வழிமுறைகளை வகுத்திருக்கவே முடியாது.

காரைக்குடியில் மகர் நோன்புத் திடலில் நடக்கும் அம்பு போடும் பெருவிழாவைக் காண இரு கண்கள் போதாது. கோவிலூரிலிருந்து கொற்ற வாளீசர் ரிஷபவாகனத்தில் முதல் நாளிரவே புறப்பட்டுக் காரைக்குடி செல்லுவார்.

"பவனி வந்தனரே – மழுவிடை – பவனி வந்தனரே!
தடுப்ப தொரு கரம் கொடுப்ப தொரு கரம்
தரித்த சுடர் மழு விரித்த தொரு கரம்
எடுத்த சிறு மறி பிடித்த தொரு கரம்
இலங்கும் அணி பணிதுலங்க வே!
அடுத்த ஒரு புலி கொடுத்த சோ மனும்
ஆனை கொடுத் தவிதானச் சே லையும்
உடுத்த திரு மருங் கசைய மல ரயன்
கொடுத்த பரி கலம் இசைய வே!
பவனி வந் தன ரே!"

என்ற திரிகூட ராசப்பக் கவிராயரின் திருவுலா வருணனை அப்படியே பொருந்தியிருப்பதைக் காண்கிறோம்.

மறுநாள் தசமியன்று மாலை காரைக்குடி நகரச் சிவன் கோவில் சுவாமி, கொப்புடையம்மன் கோவிலில் குடியிருக்கும் நாயகி, பெருமாள் கோவிலிலிருந்து திருமால் எல்லோரும் தலைப்பாகையும் இடுப்பில் உடைவாளும் அணிந்து கையில் வில்லேந்திப் பகைவர்களை அழிக்கக் குதிரை வாகனத்தில் புறப்படுவார்கள். நான்கு சுவாமியும் மகர் நோன்புத் திடலுக்கு வந்ததும் அம்பு போடும் நிகழ்ச்சி நடக்கும். குதிரைகள் சுற்றிச் சுற்றி வருவதும் பெட்ரோமாக்ஸ் விளக்கொளியில் ஜனங்கள் அங்குமிங்கும் ஓடுவதும் யுத்தம் நடப்பது போலவே பிரமை தட்டும். கடைசியாக எல்லா சுவாமியும் வரிசையாக நிற்கும் போது ஒரே சமயத்தில்

தீபாராதனை செய்வார்கள். பதினாயிரக் கணக்கான மக்கள் கன்னத்தில் போட்டுக் கொள்வதைப் பார்ப்பதே ஒரு அனுபவம்.

தற்போது கோவிலூர் ஆதீனகர்த்தராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ ராமநாத ஞானதேசிக சுவாமிகள் இனிய இயல்புகள் அமையப் பெற்றவர். காளையார் கோவில் ஸ்ரீ அருணாசல சுவாமிகளிடம் பயின்றவர். காளையார் கோவில் மடம், சிதம்பரம் கோ. சித. மடாலயம், மதுரை குட்டைய சுவாமிகள் மடாலயம், முதலியவற்றுக்கு ஆதீனகர்த்தாவாக இருந்து நிர்வாகத் திறன் பெற்றவர். காசி யாத்திரை செய்ததோடு பன்னிரண்டு ஜோதிர்லிங்கங்களையும் தரிசித்தவர். இவர்களுடைய ஆளுகையில் கோவிலூர் இன்னும் பெருமிதமுற்றுத் திகழும் என எதிர்பார்க்கலாம்.

கோவிலூரில் நெல்லையம்மன் சந்நிதி எதிரேயுள்ள மகா மண்டபம் சிற்ப விசித்திரங்களுடன் கூடியது. ஒரே கல்லில் செய்த தூண்களில் அதிசயிக்கும் படியான சிற்பங்களைக் காண்கிறோம்

ஒரு தூணில் சரஸ்வதி தேவி வீணை வாசிக்க வருகிறாள். இன்னொரு தூணில் சாரதை அலங்கார பூஷிதையாகத் தரிசனம் தருகிறாள். ஊர்த்வ தாண்டவ நடராஜா. அவர் பாதங்களுக்கருகே காரைக்கால் அம்மையார். குடமுழா வாசித்துக் கொண்டே கரங்குவித்த நிலையில் பிரும்மா. மீனாட்சி கல்யாண சிற்பம்.

எல்லாவற்றையும் விட நமது கருத்தைக் கவர்ந்து, மனத்தை உருக்குவது ஸ்ரீமத் ஆண்டவர் அம்பாளுக்கு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யும் நிலையிலுள்ள சிற்பந்தான். வருபவர்களுக்செல்லாம் சரணாகதி தத்துவத்தை விளக்கும் சிற்பமாக இது விளங்குகிறது. ஞானத்தை விட பக்தியே எளிது. பக்தி செய்தாலே முக்தி பெறலாம் என்று நம்மைப் போன்றவருக்கு ஊக்கம் தருவதாக அமைந்திருக்கிறது! ஆதிசங்கரர் பகவத் பாதாளும் பக்தியினால் இன்னும் எளிதில் ஈசுவர அனுக்கிரகத்தைப் பெறலாம் என்றுதானே போதித்தார்! சாத்திரங்களையெல்லாம் படித்து ஞானக்கடலாக விளங்கினாலும் பக்தியில் தான் இந்தப் பிறவியிலேயே சுகம் இருக்கிறது என்று கூறாமல் கூறுகிறார் ஆண்டவர்.



உ

சிவமயம்

# கோவிலூர் ஆதீனகர்த்தர்கள்

எந்நாட்டவர்க்கும் இறைவனாம் தென்னாடுடைய சிவபெருமான் அருள்மிகு உமையோடு அமர்ந்து அருள் காக்கும் ஆலயங்கள் ஆயிரமாயிரம் இருப்பினும் சிவபெருமான் தன் நாடு எனக் கொண்டது தென்பாண்டிநாடே!

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வீரசேகரபாண்டியன் ஈசனிடம் ஏற்பட்ட ஈடில்லா நேசத்தின் காரணமாக சிவனுக்கு ஸ்தலம் அமைக்க எண்ணி "ராஜ கட்க பரமேசுவரர்" என்னும் கொற்றவாளீசுவரர் திருநெல்லலையம்மன் சமேதராக காரைக்குடிக்கு மேற்கே கோவிலூரில் அமைத்தார்.

இத்திருத்தலம் கிழக்கே திருப்பெருந்துறையும், தெற்கே திருக்கானப்பேரும், மேற்கே திருப்பத்தூரும் வடக்கே திருமெய்யரும் ஆன பாடல்பெற்ற திருத்தலங்கள் சூழ அமைந்துள்ளது.

வரலாற்றுச் சிறப்பு மிக்க புராணப்பெருமையுடன் விளங்கும் இப்புனிதப்பதி "ஸ்ரீவல்லபம்", "சமிவனசேஷத்திரம்", "வன்னிவனம்" என்னும் சிறப்புப் பெயர்களுடன் "கழனிவாயில்", "ரசகத் பெருந்தெரு", "வீரபாண்டியபுரம்", "மருகேந்திரபுரம்", என்னும் வேறு பெயர்களாலும் புகழ்ந்து பல ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. இவ்வூரில் மதுப்பிரிய முனிவர் என்னும் மகான் தவம் செய்த காரணத்தால் இவ்வூர்க் குளத்துக்கு மதுபுஷ்கரணி என்றும் இவ்வூரில் ஓடும் நதிக்குத் தேனாறு என்றும் வேறு பெயர்களும் உண்டு. இத்தெய்வீகத் திருத்தலத்தை திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் கோவிலூர்ப் புராணம் என தெள்ளு தமிழில் புகழ்ந்து தலபுராணம் பாடியுள்ளார்.

இன்றைக்கு சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன் காரைக்குடி நகரத்தார் வழியில் தோன்றிய முத்துராமலிங்கம் தன் பெற்றோருடன் நாகப்பட்டினம் அருகில் உள்ள சிக்கலில் வசித்து வந்தார். தன் தந்தையுடன் ஒரு நாள் அருகில் உள்ள சிற்றூரான பொருள்வைத்த சேரிக்குச் சென்றார். அவ்வூரில் நெசவுத் தொழிலை ஜீவனத்தொழிலாகக் கொண்டு ஸ்ரீ உகந்தலிங்க சுவாமிகள் திருவள்ளுவரைப் போல நெசவுத் தொழிலில் கிடைக்கும் வருமானத்தை மூன்று பங்குகளாகப் பிரித்து முதல் பகுதியை மறுநாள் நெய்வதற்கு நூல் வாங்கவும், இரண்டாம் பகுதியை வீட்டுச் செலவுக்கும் மூன்றாம் பகுதியை அடியார்களுக்கு அமுது அளிக்கவும் பயன்படுத்தி வந்தார். வேதாந்த நூல்களைக் கற்பித்து பலருக்கும் வேதாந்த ஞான உபதேசகராகவும் விளங்கினார். இவர் சிருங்கேரி

பீடத்தின் அருளாளர்களை குருஸ்தானமாகக் கொண்டு ஞானமார்க்கத்தை உபதேசித்து வந்தார்.

முத்துராமலிங்கத்துக்கு ஸ்ரீ உகந்தலிங்க சுவாமிகளிடம் அளவிட முடியாத பக்தியும், பாசமும் ஏற்பட்டது. அன்றுமுதல் அவரும் ஒரு மாணவராகப் பாடம் கேட்டு வந்தார். ஒரு சமயம் வடநாட்டு சாது இவரை சந்தித்தபொழுது இவரிடம் உள்ள தெய்வீக உள்ளுணர்வை உணர்ந்து "இவன் உலகத்துக்கே உபதேசிக்க பிறந்தவன்" என வாழ்த்தி அனுப்பினார். அன்று முதல் முத்துராமலிங்கத்தை எல்லோரும் "ஆண்டவர்" என அழைக்கத் தொடங்கினர். வேதாந்த ஞான நூல்களான "நாநாஜீவ வாதக்கட்டளை", "கீதாசாரத்திரட்டு", "சசிவன்னபோதம்", "மஹாராஜத் துறவு", "அஞ்ஞவதைப்பரணி", "வேதாந்த சூடாமணி", "விவேக சூடாமணி", "பஞ்சகதசி", "கைவல்யநவநீதம்", ஈசுரகீதை", 'பகவத்கீதை", "ப்ரம்மகீதை", ஞான வாசிட்டம் என்னும் பதினாறு நூல்களாகும். இந்த பதினாறாவது நூலான ஞான வாசிட்டத்துடன் பாடம் பூர்த்தி செய்வது முறை, வசிட்ட முனிவர் ஸ்ரீராமபிரானுக்கு உபதேசித்த வேத நூலின் சாரமே இப்பதினாறாவது நூலாகும்.

ஸ்ரீ ஆண்டவர் சுவாமிகள் தன்குருநாதரைப் போலவே சிருங்கேரி ஆதிசங்கராச்சாரியாரின் மரபில் வந்த அருளாளர்களின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் பின்பற்றி வந்தார். ஞானமார்க்கத்தில் ஈடுபட மனப்பக்குவ தகுதி தேவை எனவும், வேதாந்தத்தில் பூர்ணத்துவம் பெற மதம், குலம், ஜாதி, சம்பிரதாயங்கள் தடையில்லை என்றும், பக்தியே முக்திக்கு வழி, எனவும் உபதேசித்தார். கோவிலூரில் வேதாந்த மடத்தை நிறுவியவர் ஸ்ரீ ஆண்டவர் சுவாமிகளேயாகும். வேதாந்த வடமொழி நூல்கள் அனைத்தையும் எல்லோரும் எளிதாகப் படித்து பக்குவம் பெற தமிழிலேயே மொழிமாற்றம் செய்து எளிய தமிழில் பாடங்களை சொல்லும் முறையையும் ஏற்படுத்தினார். வேதாந்த மடங்களை நிறுவி சாதுக்கள் எவ்வித விசாரமுமின்றி வேதாந்த பாடம் கற்க ஏற்பாடு செய்தார்.

ஒரு சமயம் ஸ்ரீ ஆண்டவர் சுவாமிகள் திருநெல்லை அம்மன் சமேத கொற்றவாளீசுவரர் கோவிலுக்குத் தரிசனம் செய்ய சென்றார். அங்கு செம்பூரான் கல்லினால் கட்டப்பட்ட அக்கோவில் சுவர்கள் சேதமடைந்து மேல் கீற்று கூரையும் காற்றினால் சரிந்து கிடந்ததை கண்ணுற்றார். மிகவும் மனம் கலங்கிய நிலையில் எவ்வாறேனும் இவ்வாலயத்தை புதுப்பித்து திருப்பணி செய்ய முடிவுசெய்தார். ஸ்ரீமத் ஆண்டவரின் எண்ணம் ஈடேற நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தாராளமாக பொருள் உதவி செய்தனர். ஸ்ரீமத் ஆண்டவரின் திருக்கரத்தால் வரையப்பெற்று அடிகோலப் பெற்றதான இத்திருக்கோவில் அடுத்து வந்த ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிகராலும், திருக்களர் ஆண்டவர்

என போற்றப்படும் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகராலும், ஸ்ரீலஸ்ரீ இராமனாத ஞான தேசிகராலும் திருப்பணி செய்யப்பட்டு, குடநீராட்டு விழா நடத்தி, சீரும் சிறப்பும், வனப்பும் மிக்க ஒப்புயுர்வு பெற்ற பெரும் திருக்கோவிலாக எல்லா அங்க அமைப்புகளுடன் நிறைசெய்து, சுற்றுவீதிகள், திருக்குளம், மையமண்டபம் நுழைவாயில், ரதக்கூடங்கள், வளைவுடன் கூடிய ரதமேருகள் அனைத்தையும் நிறுவி, புதுப்பித்து, வேதபாடசாலை குடியிருப்புகள் ஆகிய நற்பணிகளையும் நகரத்தார் பலரும் பொருள் உதவி செய்ய செவ்வனே செய்து முடித்தார்கள். அரசர்கள் காலத்து கோவில் திருப்பணிக்களுக்கு பின்பு முதல்முதலாக கோவில் திருப்பணி செய்தவர் ஆண்டவரே. நாட்டுக்கோட்டை நகரத்தார்களை கோவில் திருப்பணியில் முழுமையாக ஈடுபடச்செய்த பெருமை ஸ்ரீமத் ஆண்டவர் சுவாமிகளேயே சாரும். கோவிலூர் மடத்தில் ஸ்ரீகுட்டைய சுவாமிகள் ஸ்ரீ ஆண்டவரின் சி யராக விளங்கினார். அவர் தேவகோட்டை நகரத்தார் வழியில் ஐந்து வீட்டார் என்னும் குடும்பத்தில் பிறந்தவர். ஸ்ரீ ஆண்டவர் இவரை சிவரகசியம் என்னும் நூலில் 25 முகூர்த்தம் வைப்பது சிவப்பணி என கூறி மதுரைக்கு அனுப்பி வைத்தார். அதை ஸ்ரீகுட்டைய சுவாமிகள் சிறப்பாக நிறைவேற்றி வைத்தார்கள்.

இவர் ஸ்ரீ மீனாட்க்ஷி அம்மனுக்கு நாள்தோறும் நிகழும் அர்த்தசாம கட்டளையில் மூக்குத்திமாலை அனுப்பி கட்டளை நிறைவேற்றி வைப்பது வழக்கம். இவ்வழக்கு இன்றும் நடைபெற்று வருகிறது.

இரண்டாவது மடாதிபதியாக தேவகோட்டை ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிகர் பரிபாலனம் செய்தார்கள். மடத்தின் நிர்வாகத்தை கவனித்து வந்த அவர் ஒன்றரை ஆண்டு காலத்துக்குப் பின் தன் உடன்பிறந்த தம்பி கருணாநிதி என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிகரிடம் ஒப்படைத்தார். இவர் ஸ்ரீமத் ஆண்டவர் விட்டுச்சென்ற ஆன்மீக பணிகளை திறம்படச்செய்து சிதம்பரம் – ஈஸ்வரன் கோவில், மதுரையில் சொக்கநாதர் மீனாட்சி அம்மனின் கும்பாபிஷேகம், கோவிலூரில் திருக்குளமும், மையமண்டபமும் அமைத்தார்கள். பிரும்ம நாமாவளி, குரு ஸ்துதி குசுமாஞ்சலி, என்ற நூல்களையும் வெளியிட்டார்கள். மடத்துக்கு விளை நிலங்கள். தென்னை தோப்புகள் வாங்கி விஸ்தரித்தார். இவரிடம் புகழ்பெற்ற யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் வேதாந்த பாடம் பயின்றார்கள். 96 ஊர் நகரத்தார்களின் கூட்டம் நடைபெற பெரும் கல்யாண மண்டபத்தை கோவிலூரில் நிறுவினார்கள்.

இவருக்குப்பின் நான்காவது மடாதிபதியாக காரைக்குடி ஸ்ரீலஸ்ரீ ராமசாமி ஞானதேசிகர் பட்டத்துக்கு வந்தார். சுமார் ஏழு ஆண்டுகள் இவர் அருளாட்சி செய்தார். கோவிலூரில் ஸ்ரீ ஆண்டவர் கோவிலை சுற்றி மதில் சுவர் கட்டி, அஷ்டலட்சுமி மண்டபமும் மடத்துக்கு உணவு படைக்கும் கூடமும் கட்டினார்கள்.

ஐந்தாவது மடாதிபதியான திருக்களர் ஆண்டவர் என பெயர் பெற்ற ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர் அவர்கள் தஞ்சை ஜில்லா மன்னார்குடியை அடுத்து திருக்களரில் அமிர்தவல்லி சமேத பாரிஜாதவனேசுவரர் திருத்தலத்தையும் வேதாந்த மடம் பிரும்மசபை, நெற்களஞ்சியம், மலர்மிகு நந்தவனம், பசுமடம், ஆகிய திருப்பணிகளைச் செய்தார்.

1908–ம் ஆண்டு சிருங்கேரி மடத்தை அலங்கரித்த ஜகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநய நரசிம்ம பாரதி முன்னிலையில் திருநெல்லை அம்மன் சமேத கொற்றவாளீசுவரர் குடநீராட்டு விழாவை சிறப்பாக செய்தார்கள். சிருங்கேரியில் சாரதாம்பாள் கோவிலையும் கருங்கற்களால் நிர்மாணித்து இத்திருப்பணிச் செலவு முழுவதும் கோவிலூர் மடத்தின் மூலமாகவே செலவு செய்தார்கள். இன்றும் சாரதாம்பாள் கோவிலும் திருநெல்லையம்மன் ஆலயமும் ஒரே மாதிரிதோற்ற அமைப்பில் உள்ளதை காணலாம். திருக்களரில் பஞ்சமூர்த்திகளுக்கு ஐந்து தேர்கள் செய்து வைத்தார்கள். இவருக்கு ராஜரிஷி என்ற பட்டமும் உண்டு. சிருங்கேரி பீடத்துக்கும் கோவிலூர் மடத்துக்கும் இவர்காலத்தில் மிக்கநெருங்கிய தொடர்பு ஏற்பட்டது.

திருநெல்லையம்மன் சந்நிதியில் எதிரே உள்ள மகாமண்டபம், சிற்ப விசித்ர வேலைப்பாடுகளுடன் கூடியது. ஒரே கல்லினால் செய்த தூண்களில் அதிசயிக்கும்படியான சிற்ப வடிவமைப்புகளை காணலாம். ஒரு தூணில் ஸ்ரீ சாரதாதேவி அலங்கார பூஷிதையாக தரிசனம்தர, மற்றொன்றில் ஊர்த்தவதாண்டவராஜாவின் பாதங்களுக்கு அருகில் காரைக்கால் அம்மையார், வேறு தூணில் குடமுழா வாசித்துக் கொண்டே கரம் குவித்தநிலையில் பிரும்மா, மீனாட்சி கல்யாணசிற்பம், எல்லாவற்றையும் ஸ்ரீமத் ஆண்டவர் அம்பாளுக்கு சாஷ்ட்டாங்க நமஸ்காரம் செய்து சரணாகதி தத்துவத்தை விளக்கி, ஞானத்தைவிட பக்தியே சிறந்தது. பக்தி செய்தாலே முக்தி என்னும் பிறவிப்பயனை அடையலாம் என்ற தத்துவத்தை இச்சிற்பம் வலியுறுத்துகிறது.

நான்காவது பட்டம் வரை மடாதிபதிகள் முழங்கால்வரை வெண்மையான வஸ்திரமும், கழுத்தில் வெண்மையான ரிப்பன் போன்ற துணியில் உத்திராட்சம் அணியும் வழக்கம் இருந்து வந்தது. ஐந்தாவது மடாதிபதியான ஸ்ரீதிருக்களர் ஆண்டவர் சிருங்கேரி குரு பீடத்தின் முறையைப் பின்பற்றி காவி உடையே அணியலானார். இன்றுவரை அப்பழக்கம் கோவிலூர் மடாதிபதிகளால் அனுசரித்து வரப்படுகிறது. இவரிடம் உள்ள வாக்குபலிதத்தால் எல்லோரும் இவரை மிகவும் போற்றி மதித்தனர். கோவிலூர் மடம் மேலும் விஸ்தரிக்கப்பட்டு திருவண்ணாமலை, பொருள் வைத்தசேரி, திருக்களர், சிதம்பரம், திருப்புவனம் ஆகிய ஊர்களிலும், கிளைமடங்களாக வளவனூர், மேட்டுப்பாளையம், எனும்பூர், தத்துவராய சுவாமிகள் மடம் காரியனூர், மதுரை, போன்ற ஊர்களிலும் பரவியது.

இவர் அருளாட்சி செய்த காலத்தைப் பொற்கால ஆட்சி என மக்களால் புகழப்படுகிறது. கல்கி பத்திரிகையில் காஞ்சி பரமாச்சாரியார் இவரை துர்வாச முனிவரின் மறு அவதாரம் என புகழ்ந்து எழுதியுள்ளார்கள்.

அதன்பின் ஆறாவது மடாதிபதியாக தேவகோட்டை ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞான தேசிகர் பட்டத்துக்கு வந்தவுடன் திருக்களர் ஆண்டவர் விட்டுச் சென்ற தெய்வீக திருப்பணிகளை நிறைவு செய்தார்கள். சிருங்கேரியில் நரசிம்ம பாரதி சுவாமிகளின் சமாதிக்கு கோவில் எழுப்பினார். இவர் காசியில் இருந்த பொழுது இருவருக்கும் நெருங்கிய ஆன்மீக தொடர்பு உண்டு. சிருங்கேரியில் ஸ்ரீ சாரதாதேவிக்கு கும்பாபிஷேகம் நடக்க ஏற்பாடு செய்தார். மைசூர் மஹாராஜா கிருட்டின இராஜேந்திரர் இவரை தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்று கௌரவித்துள்ளார்கள்.

ஏழாவது மடாதிபதியாக தேவகோட்டை ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் தன்குரு திருக்களர் ஆண்டவர் ஊரான திருக்களிரில் மடாலயத்தையும் ஆண்டவர் சமாதி கோவிலையும் சிறப்பித்து இரண்டிலும் அமுதுபடி செலவும் நடத்தி வந்தார்கள். விளை நிலங்கள் சுமார் நானூறு ஏக்கருக்குமேல் இவர்காலத்தில் வாங்கப்பெற்றது. நானூறு மாணவர்கள் இவர்களிடம் வேதாந்த பாடம் கற்று பல கிளை மடங்களை உருவாக்கியுள்ளார்கள். அந்நாளில் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளும், ஸ்ரீரமண மகரிஷிகளும், திருவண்ணாமலை மடத்தில் தினமும் இவரிடம் சம்பாஷித்து மடத்தில் தினமும் உணவு அருந்தி சென்றுள்ளார்கள். மூலிகைகளைக் கொண்டு மருந்துகள் தயாரித்து ஏழைகளுக்கு தர்மமாக கொடுத்து குணப்படுத்தி வந்துள்ளார்கள். இவர் காலத்தில் கோவிலூர் மடம் சீரும் சிறப்புமாக ஆன்மீக பொலிவுடன் சிறந்து விளங்கியது.

அதன் பின் எட்டாவது மடாதிபதியாக காரைக்குடி ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர் பட்டத்துக்கு வந்தார்கள்.

இவர் கோவிலூர் சிதம்பரம், எறும்பூர், திருக்களர், பொருள் வைத்தசேரி மானாமதுரை ஆகிய பல மடங்களுக்கும் தாமே ஏக மடாதிபதியாக இருந்து பரிபாலனம் செய்தார்கள், சிருங்கேரி மடாதிபதி ஒரு சமயம் இவரிடம் எல்லா திருப்பணி செலவுகளையும் கோவிலூர் மடத்தின் மூலமாகவே சிருங்கேரியில் செலவிடுகிறீர்கள். உங்கள் மடத்தையும் கவனிக்கவேண்டாமா என கனிவுடன் கூறியுள்ளார்.

பின் ஒன்பதாவது மடாதிபதியாக பட்டத்துக்கு வந்த ஸ்ரீலஸ்ரீ ராமனாதஞான தேசிகர் கோவிலூர் மடத்தை தற்கால வசதிக்கேற்ப நவீன முறையில் புதுப்பித்து, இருமுறை மலாய் நாடு சென்று பொருள் ஈட்டிவந்து திருவண்ணாமலை அம்பாள்

கோவிலுக்கு தேர் செய்து வைத்தார்கள். திருவண்ணாமலையில் சேவாஸ்ரம் நிறுவி ஏழை, மாணவர்களுக்கு கல்வியும் உறைவிடம், உணவு, சீருடை அளித்து ஆங்கிலமொழி பயிற்சியும் அளித்து வந்தார்கள். இன்று அப்பள்ளி மிகவும் வளர்ச்சியடைந்து சுமார் ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் பயின்று வருகின்றனர். இளமையிலிருந்தே சுவாமிகளுக்கு அருணகிரிநாதரிடம் ஈடுபாடு அதிகம். முதன் முதலில் திருவண்ணாமலையில் அருணகிரிநாதருக்கு விழா துவக்கியதோடு, ஆண்டு தோறும் அவ்விழா சிறப்புற நடத்த பேராதரவும் கொடுத்து வந்தார்கள். கோவிலூரில் இவர் காலத்தில் முகப்பு தேர் மண்டபங்கள் பழுது பார்க்கப்பட்டன.

கோவிலூர் ஸ்ரீ ஆண்டவர் மடத்துக்கு பத்தாவது மடாதிபதியாக ஸ்ரீலஸ்ரீ ராமனாத ஞான தேசிகர் பரிபாலனம் செய்தார். அதன்பின் 1986–ம் ஆண்டு அக்டோபர் மாதம் 16ம் நாள் ஸ்ரீ காசி விஸ்வநாத ஞான தேசிகர் அவர்கள் பட்டத்துக்கு வந்தவுடன் எல்லா மடங்களையும் கோவிலூர் மடத்தின் மேற்பார்வையில் கொண்டுவந்து, அந்தந்த மடங்களின் வரவு செலவுகளை சீர் செய்து அந்தந்த மடமே செலவிட உத்தரவிட்டார். மாதந்தோறும் சிந்தனைப் பூங்கா நடத்த ஏற்பாடு செய்தார். சிதைந்து போன தேர்களை புதுப்பிக்க ஏற்பாடு செய்துள்ளார். வேதாந்த வகுப்புகள் மக்கள் சேவை, ஏழை மாணவர்களுக்கு கல்வியுடன் உணவு, உடை, மருத்துவச் செலவு, ஆகிய எல்லா உதவிகளையும் செய்தார்.

திருமந்திரம், சித்தர்பாடல் ஆகியவற்றில் எந்நேரமும் ஆழ்ந்த பற்றும், கற்பதும் கேட்பதும் முருகனின் அற்புதம் என கந்தனின் திருமந்திரத்தை எல்லோருக்கும் உபசரிப்பார். தேவி, தேவி என அம்பாளின் மேல் அளவில்லா பக்தி கொண்டு எல்லோரையும் அன்புடன் ஆசீர்வதித்து திருநீறு இட்டு மனமுருக வாழ்த்துவார். குழந்தைகளிடம் ஆன்மீக உணர்வுவளர தம்பி பாப்பா படித்து பாரு என புத்தகங்கள் இன்னும் பல ஆன்மீக உணர்வு கொண்ட புத்தகங்களும் வெளியிட்டுள்ளார்கள்.

தற்போது பன்னிரண்டாவது மடாதிபதியாகப் பொறுப்பேற்று இருப்பவர் ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்.

நம் நகரத்தார் பெருமக்களை, மன்னர் பின்னோராக ஆலயத் திருப்பணிகளில் ஈடுபடச் செய்தவர்களும் உலகம் முழுவதும் வேதாந்தத்தைப் பரப்பிய கோவிலூர் திருமடத்தை உருவாக்கியவர்களுமான, ''கோவிலூர் ஆண்டவர்'' என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் மகன் வழி 6வது தலைமுறைப் பேரன் ஆவார்கள் நமது நாச்சியப்ப சுவாமிகள் என்பது குறிப்பிடத்தக்கது.

காரைக்குடியில் பிறந்த பிள்ளையார்பட்டிக் கோவிலைச் சேர்ந்த நாச்சியப்ப சுவாமிகள், தமது 15 ஆவது வயதில், காரைக்குடிக்கு இனி வருவது இல்லை என்ற வைராக்கியத்துடன் சென்னை வந்து, திருவான்மியூர் "கலாக்ஷேத்ரா" வில் திருமதி ருக்மணி அருண்டேல் அம்மையாரின் ஆதரவில் படிப்பை முடித்து, அம்மையார் நிறுவிய ஆலமரம் போன்ற கலாக்ஷேத்ரா தொண்டு நிறுவனத்தில், தன்னையும் இணைத்துக் கொண்டு சிறு வயது முதலே தொண்டு மனப் பான்மையுடன் வளர்ந்தவர்கள்.

அச்சுக் கலையின் நுணுக்கங்களை ஜெர்மன் நாட்டுக்குச் சென்று பயின்று கலாக்ஷேத்ராவின் ஓர் அங்கமான "கலாக்ஷேத்ரா அச்சகம்" மற்றும் பப்ளிகேஷன்ஸ் நிர்வாகியாக நீண்டகாலம் பணியாற்றி பின்னாளில் அம்மையாரின் ஆசியோடு அதன் உரிமையாளராக ஆனார்கள்.

அச்சுக் கலையிலும், புகைப்படக் கலையிலும் கைதேர்ந்த நிலையில், வெளிநாட்டு நூல்களுக்கு இணையாக இங்கு சென்னையில் பதிப்பித்து நூல்களை அமெரிக்கா போன்ற மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து தமது அயராத உழைப்பின் மூலம் பெரும் பொருள் ஈட்டினார்கள்.

கோவிலூர் ஆதீனமாக தாம் பொறுப்பேற்று இருப்பது, தமக்குக் குருநாதர் இட்ட கட்டளை என்ற பணிவோடும், கோவிலூர் மடத்தை மகாதேவ ஞானதேசிகர் காலத்தில் இருந்தது போல் ஆன்மீகக் கல்வி வழங்கும் தலை சிறந்த மடமாக விளங்கச் செய்ய வேண்டும் என்ற துடிப்போடும் நிர்வகித்து வருகிறார்கள்.

திருநெல்லையம்மை தம்மை இந்த நோக்கம் நிறைவேற ஒரு தொண்டனாகவே பணிசெய்ய வாய்ப்புத் தந்திருக்கிறார் என்று நம்பிப் பல பணிகளைத் தொடங்கியிருக்கிறார்கள் சுவாமிகள்.

சுவாமிகள் மடாதிபதியாகப் பதவி ஏற்ற தினமே கோவிலூரில் ஒரு சிறுவர் பள்ளி தொடங்கப் பெற்றது.

குழந்தைக் கல்வியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட நாச்சியப்ப சுவாமிகள், சின்னஞ் சிறுவயதில் வெறும் ஏட்டுக் கல்வி கற்றுக் கொடுப்பது மட்டும் போதாது நல்லொழுக்கம், தெய்வபக்தி, கலைத் திறமை, கைவினைத் திறன், இவற்றையும் சொல்லிக் கொடுத்து ஊக்குவிக்க வேண்டும் என்பதில் அசைக்க முடியாத உறுதி உடையவர்கள்.

கோவில்கள் இருக்கின்றன. மக்களுக்குப் பக்தியும் இருக்கிறது, ஆனால் கோவிலில் பணி செய்வோர் குறைந்து வருகிறார்கள். போதிய ஊதியம் இன்மைதான் காரணம். பல்லாயிரம் ஆண்டுகளாகத் தழைத்து வேரூன்றிய கோவில் கலாசாரம் நம் கண் எதிரே மங்கிக் கொண்டு வருகிறதே எனக் கவலை கொண்ட சுவாமிகள், மேல் நாட்டினர் பலர் பொருளாதார வளர்ச்சியினால்




மட்டுமே வாழ்க்கை செம்மையாக அமைய முடியாது என்பதை உணர்ந்து ஆன்மீக அனுபவத்தைத் தேடி பாரத நாட்டை நோக்கி வருகிறார்கள் என்பதையும் கோடிட்டுக் காட்டுகிறார்கள்.

அப்படி இருக்கும்போது நமது நாட்டில் ஆன்மீகம் தழைத்தோங்க என்னென்ன செய்யவேண்டும்?

தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள் மடாதிபதியாக பதவி ஏற்ற மூன்று மாதத்துக்குள் கோவிலூரில் வேதாகம பாடசாலை, திருமுறைக் கல்லூரி, நாதசுர தவில் இசைக் கல்லூரி எல்லாம் தொடங்கப் பெற்றுள்ளது. மேலும் தேர் செய்யும் பயிற்சிக் கூடம், வாகனங்கள் செய்முறை, திருவாபரணங்கள் செய்முறை போன்றவை கற்றுக் கொடுக்க வசதிகள் செய்து தர ஏற்பாடு செய்துள்ளார்கள். தேர்வாகனக் கல்லூரி, சிற்பக்கல்லூரி ஆகியன 9.2.97 அன்று தொடங்கப் பெற்றன.

தென்நாட்டுக் கோவில்களும் கோவில்களைச் சார்ந்து வளர்ந்த எல்லா கலைகளும் மிக உயர்ந்த நிலையை அடைய வேண்டும், நாட்டில் ஆன்மிகம் தழைக்க வேண்டும், இந்தியப் பண்பாடு நிலைபெற வேண்டும் என்பதை எல்லாம் குறிக்கோளாகக் கொண்டு ஸ்ரீலஸ்ரீ நாச்சியப்ப சுவாமிகள் பாடுபட்டு வருகிறார்கள்.

மேலும் கோவிலூர் மடாலயம் ஒரு பல்கலைக் கழகமாக திகழ வேண்டும் என்று பெரு விருப்பம் கொண்டு செயலாற்றி வருகிறார்கள்.

இந்த எண்ணத்தைச் செயலாக்கும் பொருட்டு முதலில், இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி நிறுவனம் [Indian Institute of Indology] என்ற ஆய்வு மையத்தை நிறுவியுள்ளார்கள். இதன் மூலம் நாடு தழுவிய பண்பாடுகளையும், மரபுகளையும் ஆராய்ச்சி செய்யவும் நூல்கள் வெளியிடவும், அறிஞர்களை ஊக்குவிக்கவும் மொழிகளையும் மற்ற பல வேறுபாடுகளையும் கடந்து இந்த ஆராய்ச்சிகள் நடைபெறவும் தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள் திருவுளம் கொண்டு பணிபுரிந்து வருகிறார்கள்.

இதற்கு அடுத்து "சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகம்" ஒன்றை செங்கல்பட்டு அருகில் சுமார் 450 ஏக்கர் நிலப் பரப்பிலும், அதன் தலைமை இடமாக கோவிலூரில் 40 ஏக்கர் நிலப்பரப்பிலும் ஆரம்பிக்க பூர்வாங்க வேலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. சனாதன தர்மத்துக்கு உட்பட்ட எல்லாக் கலைகளையும், மொழிகளையும், இலக்கியங்களையும், பழம் பெரும் சின்னங்களையும் ஆராய்ந்து வெளியிட இப் பல்கலைக் கழகம் ஊக்குவிக்கும்.

இந்திய நன்னாட்டின் மேம்பாட்டுக்காகவும் சனாதன தர்மத்தை நிலை நிறுத்தவும் கோவிலூர் தவத்திரு நாச்சியப்ப சுவாமிகள் மேற்கொண்டுள்ள இந்தப் பணிகளுக்கு உலக முழுவதிலும் உள்ள அன்பர்கள் தங்கள் ஒத்துழைப்பை நல்க வேண்டுகிறோம்.

★★★

ஸ்ரீ குருவே துணை

# இந்தியப் பண்பாடு - ஆராய்ச்சி நிறுவனம்
# (Indian Institute of Indology)
## ஸனாதன தர்ம உலகப் பல்கலைக் கழகம்

"ஸனாதன தர்மம்" என்றால் என்ன?

முதலில் "ஸனாதன தர்மம்" என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம்? புராதனமான நெறி என்று சொல்லலாம். இன்னும் விளக்கமாகச் சொன்னால்

1. தொன்மைக் காலந்தொட்டுத் தொடர்ந்து வருகின்ற
2. என்றும் நிலைத்துள்ள
3. நல்ல நடத்தையும் பண்பாடும் செறிந்த வாழ்க்கை முறை என்று கூறலாம்.

மனித நாகரிகம் தோன்றி வளர்ந்த நாள் முதல் பாரத நாடு ஒரு தலை சிறந்த பண்பாட்டை உருவாக்கி அதன் வழி ஒரு மிகச் சிறந்த வாழ்க்கை முறையை பாரத நாட்டுக்கும் ஏன் உலகத்துக்குமே உருவாக்கி அளித்திருக்கிறது. இதை இந்து மதம் என்றும் "ஹிண்டுயிஸம்" என்றும் தவறாகப் பெயரிட்டு அழைத்தாலும் ஸனாதன தர்ம வாழ்க்கை முறை உலகம் தழுவியதாகவும் எக்காலத்துக்கும் பொருந்துவதாகவும் அமைந்திருக்கிறது என்பதை மிகப் பெரும் பாலோர் ஒப்புக் கொள்கிறார்கள். மனித குலத்தை மேன்மைப்படுத்தும் நெறிமுறைகளே ஸனாதன தர்மம் எனப்படுகிறது.

ஸனாதன தர்மத்தின் அடிப்படையாக விளங்குவது கடவுள் பக்தி, தெய்வ நம்பிக்கை. நம் அறிவினால் எட்ட முடியாதவரும், அனைத்தையும் கடந்தவரும் அனைத்துக்கும் உள்ளிருப்பவருமான கடவுள் இந்த அண்ட பகிரண்டங்களை ஆக்கியும், காத்தும் நிலை பெறச் செய்தும் அழித்தும் உயிருள்ள அல்லாத அனைத்துப் பொருட்களையும் அவற்றைத் இயக்கும் இயற்கை விதிகளையும் உண்டாக்கி முத்தொழில்களைச் செய்கிறார். அல்லது ஐந்தொழில் புரிகின்றார். அவரே அன்பின் வடிவமாகவும், கருணையின் வடிவமாகவும் ஆனந்த வடிவமாகவும் தேஜோ மயமாகவும் விளங்குகிறார். மனித குலம் மேம்பாடடைய உண்மை என்ற ஒளியால் வழிகாட்டுகிறார். மனிதன் தன் ஆன்ம ஸ்வரூபத்தைக் கண்டு கொள்ளும் தணியாத தாகத்தையும் தருகிறார். இந்தக் கருத்தை அனைத்து மதத்தினரும் ஒப்புக் கொள்கிறார்கள். பரப்ரும்மம், தெய்வம் அல்லது பரமாத்மா என்று நம்மால் அழைக்கப்படும் இறைவன் அன்பு, கருணை, உண்மை என்ற ஒளியில் சுடர்விடும் ஆனந்த சொரூபி என்று கூறலாம்.

ஸனாதன தர்மம் என்ற வாழ்க்கை நெறி எல்லோராலும் எந்தக் காலத்திலும் கடைப்பிடிக்கக்கூடிய, ஜீவனுள்ள, சக்தியுள்ள, வழிகாட்டக்கூடிய உலக மேம்பாட்டுக்கான நெறியாக விளங்குகிறது. நமது பாரத நாட்டு முன்னோர்கள் தீர்க்க தரிசனத்தோடு சில வழிமுறைகளை வகுத்து தர்ம சாஸ்திரங்களைச் செய்து அதன்படி மனித வாழ்க்கையை அமைத்துக் கொடுத்தார்கள். தன்னலத்தைத் துறந்து, அன்பும் பக்தியும் மேலிட்டுத் தெய்வங்களைப் பூஜிப்பதனால் ஏற்படக்கூடிய பயன்களை உணர்ந்து அதற்கு ஆகமங்களைச் செய்து தந்தார்கள்.

ஸனாதன தர்ம முறையைப் பின்பற்றி வாழ்பவர்கள் இந்தப் பூவுலகிலேயே தேவலோகத்தைக் காணமுடியும். சிறந்த வாழ்க்கைத்துணைநலம், நன் மக்கள், போற்றுதலுக்குரிய நண்பர்கள், குரு சிஷ்ய பாவம், சிறந்த பொது நல ஆட்சி முறை செல்வச் செழிப்பு எல்லாம் தானாகவே கைகூடும் வகையில் ஸனாதன தர்மம் அமைந்திருக்கிறது. அறிவு மலர்ச்சி, ஆன்மீக விழிப்புணர்வு இவற்றுக்கும் ஸனாதன தர்மம் வழிகாட்டுகிறது.

ஸனாதன தர்மத்தின் அடிப்படை கொள்கைகளை அனைவரும் அறிந்து கொள்ள வழிவகை செய்ய வேண்டும். தர்ம சாஸ்திரங்களும், ஆகமங்களும், ஸ்மிருதிகளும், சமயங்கள் வளர்த்த சிறந்த தமிழ் நூல்களும் படிப்பார் இன்றி வீணாகிக் கொண்டிருக்கின்றன. இதைப்பற்றி மிகவும் கவலைப்பட்டவர் காஞ்சி காமகோடி பீடாதிபதியாக விளங்கிய மகா ஸ்வாமிகள் அவர்கள்.

இளையாற்றங்குடியில் ஸ்ரீசந்திரசேகரேந்தர் சுவாமிகள் தங்கியிருந்தபோது நாடு தழுவிய முறையில் ஆகம வித்வத் ஸதஸ் நடப்பதற்கு வழிவகை செய்தார்கள். நாட்டின் மிகச் சிறந்த சாஸ்திர விற்பன்னர்கள் கூடி சுவாமிகளின் முன்னிலையில் ஆகமங்கள் சாஸ்திரங்கள், ஸ்ம்ருதிகள் கோவில் தொடர்புடைய அருங்கலைகள் எல்லாவற்றையும் பற்றி உரை நிகழ்த்தினார்கள்.

இப்படி எப்போதாவது ஒருமுறை சதஸ் கூட்டினால் போதாது. விஷயம் தெரிந்த ஆகம சாஸ்திர விற்பன்னர்கள் அருகி வருகிறார்கள். எப்போதும் நிலைத்திருக்கக் கூடிய வகையில் பாரத நாட்டுப் பாரம்பரியமான கலைகளையும், சாஸ்திரங்களையும் விரும்புவோர் படித்து அறிந்துகொள்ளவும் பயிற்சி பெறவும் ஏதாவது செய்ய வேண்டும்" என்ற எண்ணம் மகா சுவாமிகளுக்கு இருந்தது. பலமுறை பல ஊர்களில் வேத ஆகமசில்பகலா ஸதஸ் நடைபெறச் செய்தார்கள்.

இப்படி அவர்கள் விரும்பித் தொடங்கியதொரு காரியம் இப்போது ஒரு வடிவம் பெற்றிருக்கிறது. கோவிலூர் ஆதினகர்த்தர் தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் இந்தச் சிறந்த காரியத்தை நடத்தும் கருவியாகத் தம்மைக் கருதிக் கொண்டு "இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி நிறுவனம்"

தொடங்கி நடத்த முனைந்திருக்கிறார்கள். இதற்கு அனுசரணையாக தவத்திரு பன்றிமலை சுவாமிகளின் வாக்கினால், "நீங்கள் எத்தனையோ தர்ம காரியங்கள் செய்ய விருக்கிறீர்கள். செல்வத்தைச் சிறந்த வழியில் உபயோகிப்பீர்கள்" என்ற ஆசியும் கிடைத்தது. இந்த அருள்வாக்கே இப்போது உருவாகி வருகிறது என்று சொல்லலாம்.

இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி நிறுவனம் என்பது என்ன என்பதையும், அது எவ்வாறு செயல்படும் என்பதையும் பார்க்கலாம்.

இந்தியப் பண்பாடு – ஆராய்ச்சி என்றால் பாரத நாட்டு வரலாறு, பழக்க வழக்கங்கள், சமுதாய வளர்ச்சி, இந்த மண்ணில் தோன்றிய மதங்கள், இசை நாட்டியம் வாத்தியம் போன்ற நுண்கலைகள், கோவில்களில் பிறந்து வளர்ந்த சிற்ப சித்திரக்கலைகள், கட்டடக்கலை, வடமொழி, தென்மொழி இலக்கியங்கள் இவை அனைத்தையும் ஆராய்ச்சி செய்தல்.

இந்த ஆய்வு மையத்தில் செய்யக்கூடிய ஆராய்ச்சிகள் என்னென்ன?

1. பாரத நாட்டு இலக்கியம், கலைகள், சமுதாயம், மதங்கள், இவற்றின் வளர்ச்சியைப் பற்றியும், நமது நாட்டின் ஆன்மீக வளர்ச்சியைப் பற்றியும் புதிய கோணத்தில் ஆராய்ந்து நூல்கள் எழுதுதல்.

2. மேற்கண்ட இயக்கங்களைத் தோற்றுவித்த நமது முன்னோர்களின் வரலாற்றை எழுதுதல். பண்பாடு அல்லது கலாசாரம் அரசர்களால் அவ்வப்போது ஊக்குவிக்கப்பட்டாலும், மக்களுடைய அன்றாட வாழ்க்கையிலும், ஞானிகளின் மெய்ஞ்ஞான வாழ்க்கையிலும், அறிஞர்களின் விஞ்ஞானத் தேடலிலும் தான் வளர்கிறது. அதை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டு பலகிளைகளாகப் பிரித்து தக்க சான்றுகளுடன் நூல்கள் எழுதுதல்.

3. நமது நாட்டின் மிகப் பழைமையான மதமான ஸனாதன தர்மத்தை ஆராய்ந்து அத்திரி மகரிஷி முதல் அரவிந்தர் வரையில் லக்ஷக்கணக்கான ரிஷிகளும் ஞானிகளும் உரைத்த விஷயங்களை வரிசைக் கிரமப்படி வகைப்படுத்தல்.

4. வடமொழியில் உள்ள வேத வேதாந்த இதிகாச புராணங்கள், சமய இலக்கியங்கள், ஆகம நூல்கள் உபநிஷதம் முதலியவைகளை ஆராய்தல்.

5. க்ரந்த மொழியில் உள்ள ஆகம நூல்கள், பூஜாவிதிகள், ஸ்தோத்திரங்கள், வேத பாடங்கள் அனைத்தைப் பற்றியும் ஆராய்ச்சி கள் (தென்னாட்டில் க்ரந்த எழுத்தும் நூல்களும் பரவலாக உபயோகத்தில் இருந்து வந்திருக்கின்றன).

6. தமிழ் மொழியில் உள்ள நீதி நூல்கள், பக்தி இலக்கியங்கள், கம்பராமாயணம் போன்ற வழி நூல்கள், வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட ஞானவாசிட்டம் போன்ற வேதாந்த நூல்கள் இவை பற்றிய விரிவான ஆராய்ச்சிகள்.

7. பதினெண் சித்தர்களின் நூல்கள்.

8. கலைகளின் தோற்றம், வளர்ச்சி, கோவில்களுடன் அனைத்துக் கலைகளின் தொடர்பு, இசை, நாட்டியம், வாத்தியங்கள், சித்திரம் சிற்பம் இவை மீண்டும் கோவில்களில் விளங்கும்படி செய்தல்.

9. ஸனாதன தர்மத்தின் பல தெய்வமூர்த்தங்கள், அவை தொடர்பான ஸ்தல புராணங்கள், வழிபாட்டு முறைகள் இவற்றைத் தக்காரைக் கொண்டு ஆராயச் செய்தல்.

10. இமயம் முதல் குமரி வரை தோன்றிய மகா பக்தர்களுடைய வாழ்க்கை வரலாறுகள், சமூகத்தின் மீது அவர்களுடைய தாக்கம் (கிருஷ்ண சைதன்யர், துளசி தாஸர், கபீர்தாஸர், மீரா, ஞான தேவர், ராமதாஸர்) அதன் விளைவுகள். கர்நாடக இசையினால் பக்தி பரப்பிய பெரியோர்கள். இவர்களுடைய சரித்திரங்களை எழுதி வெளியிடுதல்.

11. கோவில்கள், மடங்கள், தர்மசாலைகள் இவற்றின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் பற்றி விரிவான வரலாறுகள் எழுதுதல்.

12. கோவில் வழிபாட்டு முறைகள், அதற்கு வேண்டிய சாதனங்கள்.

இவற்றை இனங்கண்டு கோவில்களில் பூஜை முறைகள் வழுவின்றி நடக்க ஏற்பாடு செய்தல்.

இன்னும் விரிவாகச் சொன்னால் ஆராய்ச்சி மேற் கொள்ளக்கூடிய விஷயங்களை இன்னும் பல கிளைகளாகப் பிரிக்கலாம்.

1. நான்கு வர்ணங்கள் அவற்றின் நோக்கம்

2. நான்கு ஆசிரமங்கள் (ப்ரும்ம சரியம் மற்றும்) அவற்றின் நோக்கம்.

3. நான்கு புருஷார்த்தங்கள்

4. நான்கு வேதங்கள் அவற்றினின்றும் தோன்றிய ஸம்ஹிதைகள், பிராம்மணங்கள், உபவேதங்கள், வேத அங்கங்கள் (சிக்ஷா வியாகரணம்)

5. பிரும்ம ஸூத்திரங்கள் பாஷ்யங்கள்.

6. புராணங்கள் 18.

7. யோகமார்க்கம், ஞானமார்க்கம், பக்தி மார்க்கம்.

8. மந்திர, தந்திர, யந்திர சாஸ்திரங்கள்.

9. சைவத்திருமுறைகள், ஆகமங்கள், சித்தர் இலக்கியம்

10. வை ணவ பிரபந்தங்கள் ஆகமங்கள்

11. அத்வைத, த்வைத, விசி டாத்வைத தத்துவங்கள்.

12. அறுபத்து மூவர், மெய்கண்டார் முதலியோர்.

13. சந்நியாசம் பூண்டு ஜீவ சமாதியில் உள்ள பெரியோர்கள் (உம் : ஸ்ரீ ராகவேந்தர ஸ்வாமி)

14. இசையால் பக்தியைப் பரப்பிய பெரியோர்கள் புரந்தரதாஸர், திரிமூர்த்திகள் முதலியோர்.

15. கோவில்கள் – சிறந்த நிலையில் உள்ளவை
வழிபாடு நடைபெறும் கோவில்கள்
சிதிலமடைந்து திருப்பணி செய்ய வேண்டிய கோவில்கள்.

16. வான சாஸ்திரம் (Astrology) நக்ஷத்திரங்கள், கிரக சஞ்சாரம், பஞ்சாங்கம் எழுதுதல்.

17. ஆகம விதிகள் – கோவில் தெய்வங்களுக்கு அபிஷேக ஆராதனை மந்திரங்கள், யாகம் செய்தல் (வைகானஸம் பாஞ்சராத்ரம் முதலியவையும் இதில் அடங்கும்) கும்பாபிஷேகம் செய்தல்.

18. பித்ரு காரியங்கள்

19. கோவில்களின் வடிவமைப்பு, கட்டடக்கலை அளவுகள்

20. நந்தவனங்கள், கோவில்களில் அந்தந்த தெய்வத்துக்குரிய பு பங்கள், பத்திரங்கள், சாமக்ரியைகள் (சந்தனம், கற்பூரம், சாம்பிராணி, பழம், பாக்கு, வெற்றிலை)

21. மூர்த்திகள், சிற்பக்கலையை ஆராய்தல் தீபக்கால்கள், விளக்குகள், யந்திரங்களின் வகைகள் மேரு முதலியவை.

22. கோவில்களில் தெய்வமூர்த்தங்களுக்கு அணிவிக்கப்படும் ஆபரண வகைகள் செய்முறை.

சரி இத்தனை விஷயங்களையும் ஆராய்ந்தால் மட்டும் போதுமா? ஆராய்ச்சியின் பயன் சமூகத்தையும் மக்களையும் சென்றடைய மக்கள் மேம்பாட்டுக்கு உதவ என்ன செய்யலாம்?

அதற்குத்தான் ஸனாதன தர்ம உலகப் பல்கலைக்கழகம் தொடங்கப் படுகிறது.

ஆன்மீகம் சம்பந்தப்பட்ட, நமது பாரதப் பண்பாட்டின் மிகச் சிறந்த வெளிப்பாடாகிய கோவில்கள் தொடர்பான அத்தனை விஷயங்களும் இந்தப் பல்கலைக் கல்லூரிகளில் பாடத் திட்டங்களாக வைக்கப்படும். மாணவர்கள் எந்தத் துறையை எடுத்துக் கொண்டு படிக்க,பயிற்சி பெற விரும்புகிறார்களோ அந்தந்தத் துறையில் பட்டம் பெற வசதிகள் செய்து தரப்படும்.

1. கோவில் வழிபாட்டில் மிக முக்கியமான விஷயம் தெய்வ மூர்த்தங்களுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்தல், இதற்கு அர்ச்சகர்கள்,குருக்கள் வேண்டும். அர்ச்சகர்களாகப் பயிற்சி பெற பாடத்திட்டம் வகுத்துப் பூஜை முறைகளை (அர்ச்சகர்,பட்டர்) சிறந்த அர்ச்சகரைக் கொண்டு பயிற்சி அளிக்கப்படும். சைவ, சாக்த, வை ணவ கௌமார கணபதி வழிபாடுகள் கற்றுத்தரப்படும்.

2. கோவில் கும்பாபிஷேக முறைகள், கடைப்பிடிக்க வேண்டிய விரதங்கள் இவை பாலாலயம் முதல் தொடங்கி கற்பிக்கப்படும்.

3. யாகசாலை அமைத்தல், பல்வேறு யாகங்கள் செய்தல், அவற்றுக்கு வேண்டிய முக்கியமான பொருள் இவைபற்றிய பாடத் திட்டம் வகுத்துப் பயிற்சி அளிக்கப்படும்.

4. கிருஹஸ்தர்களுடைய வீடுகளில் நடைபெறும் கல்யாணம், உபநயனம், ஹோமங்கள், க்ருஹப்ரவேசம், பூஜைகள், இவைகளைப் பற்றிய எல்லாப் பூஜை விரத முறைகளும் பயிற்றுவிக்கப்படும்.

   மேற்கண்ட பூஜைகள் செய்வதற்குக் கோவில்களும் யாகங்கள் முதலியன செய்யக்கூடிய கூடங்களும் பல்கலைக் கழக வளாகத்தி லேயே கட்டப்பட்டு நேரில் செய்முறை பயிற்சி அளிக்கப்படும்.

5. ஸங்கீதம் நாட்டியம் முதலிய ஹோம உபசாரங்களுக்கு உட்பட்ட கலைகள் அவற்றின் தெய்வீகத் தன்மையோடு இறைவனுக்கு அர்ப்பணமாகவே செய்வதற்கு வாய்ப்பளிக்கப்படும்.

6. தலை சிறந்த வாக்கேயகாரர்களின் மந்திர சக்தியுடைய, பக்தி ரஸத்தில் தோய்ந்த கீர்த்தனங்கள் அவற்றின் புனிதம் குறையாமல் தெய்வ வழிப்பாடாகக் கற்றுத்தரப்படும்.

7. யோக மார்க்கம் (பதஞ்சலியோகஸூத்ரம்) ஞான மார்க்கம் (ஞான வாசிஷ்டம்) பக்தி மார்க்கம் (பாகவதம்) உள்ள நூல்களைப் படிக்கவும் கடைப்பிடிக்கவும் பாடங்கள் நடத்தப்படும்.

8. வேதம் ஓதக் கற்றுத்தரப்படும். வடமொழி, க்ரந்தம், தமிழ் மொழிகளும் இயன்றால் தெலுங்கு, கன்னடம், மலையாள மொழிகளும் கற்பிக்கப்படும்.

9. வடமொழியில் வேதாந்த, அத்வைத, த்வைத, விசி டாத்வைத சித்தாந்தங்கள் பிரும்மஸூத்ர பா யம், தர்ம சாஸ்திரங்கள், ஆகம சாஸ்திரங்கள் பாடமாக வைக்கப்படும்.

10. தமிழில் உள்ள திருமுறைகள், வேதாந்த நூல்கள், திவ்யப்ரபந்தம், முதலான வைஷ்ணவ நூல்கள் நீதி நூல்கள், சித்தர் இலக்கியங்கள் இவற்றைப் பயிலப் பாடத் திட்டங்கள் அமைத்துப் பாடங்கள் நடத்தப்படும்.

11. வேதாந்தங்களான நியாயம், வைசேஷிகம், ஜ்யோதிஷம் தர்க்க சாஸ்திரம், வியாகரணம் முதலிய கிளைகளுக்குப் பாடத் திட்டங்கள் அமைத்துப் பாடங்கள் நடத்தப்படும்.

12. ஸம்ஹிதை, பிராம்மணங்கள், உபநிஷத பாடங்கள் நடத்தப்படும்.

13. தேவாரம் ஓதுவதற்கு ஓதுவாரைக் கொண்டு கற்பிக்கப்படும்.

14. ஆகம சாஸ்திர விதிகளுக்கு உட்படாத பூஜை முறைகளும் கற்பிக்கப்படும்.

⌘ ⌘ ⌘

